# கவிமுளரி ®

மாதாந்த மின்னிதழ்

கவிதைகளின் வாசம்

காலகோள் : 2023

ISSN 3021-6680

Kavi Mulari Magazine




## புதிய ஆக்கங்கள் வரவேற்கப்படுகின்றன.

படைப்புகளை அனுப்புவோர் கவனிக்க வேண்டியவை :

- கவிதைகள் மட்டுமே அனுப்பலாம்.
- ஒருங்குறியில் (Unicode font) தட்டச்சு செய்து அனுப்ப வேண்டும்.
- படைப்பாளர், படைப்பின் கீழ் தமிழில் பெயரையும் வசிப்பிடத்தையும் குறிப்பிட்டு அனுப்ப வேண்டும்.
- ஆக்கம் தனது சொந்தப் படைப்பு என்பதை உறுதிசெய்தல் அவசியம்.
- ஒவ்வொரு மாதமும் 15 ஆம் தேதிக்குள் ஆக்கங்கள் அனுப்பிவைக்கப்படல் வேண்டும்.
- ஒருவர் எத்தனை ஆக்கங்களும் அனுப்பலாம்.
- ஆக்கங்கள் அடுத்தடுத்த இதழ்களில் பிரசுரிக்கப்படும்.
- மின்னஞ்சலுக்கு அனுப்பப்படும் ஆக்கங்களே இதழுக்கு ஏற்கப்படும்.

. . . . . . . . . . . . . . . . . . .

## ஆக்கங்களை அனுப்ப


editor2023kavimulari@gmail.com


வாசிப்பு அனுபவத்திற்கு நுழையுங்கள்...

https://www.facebook.com/profile.php?id=61552005633300
https://facebook.com/groups/818237263429433/
https://kavimulari.blogspot.com



"எழுதுகோல் புரட்சி
எங்ஙனும் எழும்பட்டும்
விழுதென விடுதலை
சமூகத்தில் நிலைக்கட்டும்"

படங்களுக்காய் நன்றி நவில்கிறோம் : Google மற்றும் முகநூல்

**நற்கவிகளுக்கு**
**வணக்கம்,**

வாழைச்சேனை பேத்தாழையைத் தளமாகக் கொண்டு இயங்கும் விபுலானந்தர் கலை இலக்கிய மன்றத்தின் முயற்சியாகக் 'கவிமுளரி' எனும் கவிதைசார் மின்னிதழ் வெளிவருகிறது.

பிரதேச கவிஞர்களுக்குக் களம் கொடுப்பதும் அவர்களின் எழுத்தாக்க முயற்சிகளுக்குக் கரம் கொடுப்பதும் எமது பிரதான அவா.

தொடர்ந்து,
10 இதழ்கள் வெளிவந்தன. அதற்கு நீங்கள் வழங்கிய ஆதரவிற்கு மேலான நன்றி. தொடர்ந்தும் ஆதரவளிப் -பீர்கள் என நம்புகின்றோம்.

இதழில் பங்குபெறும்
கவிஞர்கள் யாவர்க்கும்
வாழ்த்துகள்.

சிலரது கவிதைகள் இடம்பெறாமல் போயிருக்கலாம். அவர்களது கவிதைகள் தொடர்ந்து வரும் இதழ்களில் நிச்சயம் வெளிவரும்.

தொடர்ந்தும் உங்கள்
பேராதரவை வேண்டும்,



உங்கள்,
-இதழாசிரியர்

2024.08.25

கவிஞர் தமிழூராள் அனுஷ்திக்கா

கவிஞர் மு.அருணகிரி

கவிஞர் பிள்ளைக்கவி பிரசாந்

கவிஞர் இரவிகாந்தன்

கவிஞர் மாலதி இராமலிங்கம்

கவிஞர் ரவிகிருஷ்ணா

வளர்கவி க.யுவக்ஷனா

பாவலர் ஈழவேங்கை தம்பியின் தம்பி

கவிஞர் தமிழ்மகள் சதுர்த்தி

கவிஞர் இரா.நிதன்

கவிஞர் தமிழினியாள்

---




# -தமிழ்த்தாய் வாழ்த்து-

நீராருங் கடலுடுத்த நிலமடந்தைக் கெழிலொழுகுஞ்
சீராரும் வதனமெனத் திகழ்பரத கண்டமிதில்
தக்கசிறு பிறைநுதலுந் தரித்தநறுந் திலகமுமே
தெக்கணமு மதிற்சிறந்த திராவிடநற் றிருநாடும்
அத்திலக வாசனைபோ லனைத்துலகு மின்பமுற
எத்திசையும் புகழ்மணக்க விருந்தபெருந் தமிழணங்கே, (1)

பல்லுயிரும் பலவுலகும் படைத்தளித்துத் துடைக்கினுமோர்
எல்லையறு பரம்பொருள்முன் னிருந்தபடி யிருப்பதுபோல்
கன்னடமும் களிதெலுங்குங் கவின்மலையாளமுந்துளுவும்
உன்னுதரத் துதித்தெழுந்தே யொன்றுபல வாயிடினும்
ஆரியம்போ லுலகவழக் கழிந்தொழிந்துசிதையாவுன்
சீரிளமைத் திறம்வியந்து செயல்மறந்து வாழ்த்துதுமே. (2)

~மனோன்மணியம் சுந்தரம்பிள்ளை.

# அம்மணங்கள்...?

தோற்பட்டையில்
உள்ளாடையின் ஓரம் வெளிவந்தாலும்,
வியர்த்துக் கொட்டும் மேனி
அவளுடையது

வயிறு பிதுங்கும் வலி
பிழிந்தெடுத்தாலும்
பிறர் அறியாது மறைக்கும் திறன்
அவளுடையது

காதலனே கணவனாகிக்
கைப் பிடித்தாலும்
தொடுகையில் வரும் பயச் சிலிர்ப்பு
அவளுடையது

ஆனால், நீ...???

அவள் ஆடை பிரித்து
அவள் மேனி கிழிக்கும் அந்த
அம்மணங்களும் அவளுடையதா???

உடல் மீது பலம் காட்டும்
கயவர்களே!
ஆடை கழன்ற புகைப்படங்களை
தாடை விரியப் பார்க்கும்
காடையர்களே!

"அந்த அம்மணங்கள்
உங்களுடையவை."

*- தமிழராள் அனுஷ்திக்கா*

அடிக்கி வைக்கப்பட்ட
கணக்கற்ற வீடுகளில்
எனது வீடு
நான்காவது தளத்தில்

கரு நீல வானில்
முழு நிலவு பார்ப்பது என்றால்
அவ்வளவு ஆசை

பல தளங்களைக் கடக்க
மின் விசை தூக்கியில்
பயணிப்பேன் அப்பாவோடு

உங்கள் அதிகார யுத்ததில்
நொருங்கிப் போன
என் வீட்டின் மண் குவியலுக்குள்
எனது பொம்மையை
தேடுவதற்கு சற்று
அவகாசம் தாருங்களேன்
உணவு ஊட்டும் நேரம்

இனி
எப்படி வானம் பார்ப்பேன்
பறவை பறந்தாலே
மனம் பதறுமே
பாவம்

கடவுள்
என்ன செய்து
கொண்டு இருக்கிறாரோ !

-மு.அருணகிரி
மதுரை,தமிழ் நாடு.

# பேருந்து பயணம்

அவசரம் அவசரமான
அலுவல்களின் உந்தலால்
அடித்துப் பிடித்து
அலைச்சலோடு தொங்கிச் செல்லும்
பயணங்களும் கொஞ்சம்
நெஞ்சை
ஆசுவசப்படுத்ததான் செய்கின்றன...

உறுமும் உரசல் உரக்கக் கேட்டாலும்
உத்வேகம் ஏதுமின்றி
ஊர்ந்து ஊர்ந்து செல்லும்
அரச பேருந்துகளும் சரி...

காற்றின் கனதியைக்
கிழித்துக்கொண்டு பறக்கும்
தனியார் பேருந்துகளாய் இருந்தாலும் சரி
முதலில் வந்து எது வசப்படுகிறதோ...
அதுவே பயணிக்கத் தெரிவாகிறது...

கேட்டுச் சலித்த பாடல்களும்
கேட்டு மறந்த கீதங்களும்
பேருந்தில் கேட்டுச் சுவைப்பதும்
தனி ஆனந்தமே எனக்கு...

ஆறுதலாய் அமர்ந்து
கண்ணுறங்கிய சில தருணங்களும்...
இடுக்கில் சிக்கிய கைவிரல்போல்
நெருக்குண்டும் வெறுப்புண்டுமாய்
சிலவுமாக கழிகிறது பேருந்து பயணம்

சில்லறைகள் தராமல்
கடந்து செல்லும்
கண்டைக்டர் நினைவு சுமந்து
இறங்குவதும் உண்டு...
சிந்தனைகள் பரந்து
இறங்கும் இடம்விட்டு மாறி
இறங்குவதும் உண்டு...

இனிப்பும் கசப்பும்
நிறைந்த வாழ்க்கையில்
யாருமே தப்பிக்க முடியாத
பயணத்தில்
பேருந்துடன் நான் கொண்ட
நெருக்கமும் நெருடலும்
தீராத திகட்டல்தான்...

-பிள்ளைக்கவி பிரசாந்
கிண்ணையூர்.

# நீதி

குற்றம் இருட்டுக்குள்
நிகழ்ந்திருக்கிறது
கங்குலுக்குள் வேவு பார்க்க
வந்த பண்ணையார்
கணக்கு பிழைத்ததும்
கதவை திறந்து
வெளியேறிவிட்டார்
இரவு சாத்தப்படாத கதவு
காலையில் சட்டென திறந்தது
அத்தனை கால்களும்
படலையைக் கடந்தன
இடையனுக்கு இனி
விடியப் போவதில்லை
நீதி.

-இரவிகாந்தன்
திருகோணமலை.

# தண்ணீர்க் குடத்தில் பிறக்கிறோம்

நீரையே போர்த்திக் கொண்டிருக்கும் உலகம்!
நீர்க்கோளம் இதுவொன்றே சிறப்பான கிரகம்!
உயிரினங்கள் வாழ்வதற்கும் தண்ணீரே காரணம்!
உற்பத்தியே செய்ய முடியாத உயிராதாரம்!

ஆறு கடலெனவே எத்தனையோ அவதாரம்!
ஆதியிலே பிறந்ததே கலாசாரம் அதனோரம்!
அகிலத்திற்கு உணவளிக்கும் மையமாக விவசாயம்!
அன்றிலிருந்து நீரின்றி ஏதிங்கே உயிர்த்தொழிலும்?

வளங்கள் கொண்ட பூமியிதனில் வாழ்கிறோம்!
வருங்காலத்திற்கென எதனைக் காத்து வைக்கிறோம்?
உவர் நீரினில் கண்டதையும் கொட்டுகிறோம்!
உபயோகமாகும் நன்னீரையும் வற்றச் செய்கிறோம்!

கழிவுநீராலும் நெகிழிக் குப்பை மேடுகளாலும்
கார்முகிலும் நீர்க்கருவை எப்படித் தாங்கிடுமோ?
காடுகளை அழித்தே கட்டடங்கள் நிறைத்தால்
காய்ந்து போயே வறட்சிதான் நிலவும்!

தனக்கெனவே வாழயெண்ணும் தீராத ஆசை!
தான்மட்டும் வாழ்ந்தால் போதுமென்ற பேராசை!
மனிதனுக்கு மட்டுமே தோன்றுமிந்த ஆசை!
மன்னுயிர்களை வாழவிடாது அழித்திடும் பேராசை!

தண்ணீர்க் குடத்தில் பிறந்த நாமென்றும்
தண்ணீரை மதித்து உயிராய்க் காப்போம்!
மண்ணின் மடியில் பசுமை வளர்ப்போம்!
மழையைத் தந்திட இயற்கைக்கு வழிவிடுவோம்!

☘☘☘

-மாலதி இராமலிங்கம்
புதுச்சேரி.

# புன்னகை பூத்தமுகம்

முன்னே தெரியுமொரு
அன்பான முகம் பார்த்து
புன்னகைக்கக் கண்டு
நானும் பூரித்துப் போகிறேன்

எத்தனை கவலையின் கனல்களோ
எத்தனை எத்தனை வலிகளோ
அத்தனையும் தாண்டி புன்னகைக்கிறது
நமக்கான பதில் குறியாகி

பழகிய முகமொன்று பார்க்காமல்
பக்கமாகிப் பயணமாகிறது
அப்பொழுது எனக்குள்ளும் பலத்த கற்பனை
"என்ன இந்தக் கிறுக்கு" என்று
அந்த உள்ளம் என்ன வலியைத் தன்னுள்
சுமந்து சென்றதோ

எண்ணிப் பார்க்கிறேன்
சில மணிக் கடப்பில்

ஆழ உறைந்த மனம்
அக்கணப் பொழுதில் சிந்திக்கிறது
நம்மைப் பற்றி மட்டுமே
ஏன் சில நொடிகள், மணிகள், நாட்கள் கூட ஆகலாம்
அவர்கள் பற்றிய தெளிவுக்காக

இருப்பினும் உங்கள் புன்னகையை விட்டு விடாதீர்கள்
ஏனென்றால்
உங்களைப் போல் சிந்தனை
அவர்களுக்கும் உண்டு
ஒரு புன்னகைக்கான தருணம்
கிடைக்கும்போதெல்லாம் புன்னகைத்து விடுங்கள்

மீண்டும் உங்களுக்காக காத்திருக்கப் போவதில்லை
மற்றோருக்கான உங்கள் புன்னகை
நாளையும் புன்னகையில் தொடங்கி
புன்னகையிலேயே முடியுங்கள்

-ரவிகிருஷ்ணா
கிரான்குளம்.

# அழியாச்சுவடு

ஓடிக்கொண்டிருக்கும் இயந்திரத்திற்குக்கூட
கிடைத்து விடும்
ஒரு நாள் விடுமுறை
தன் பிள்ளையின்
இலட்சியத்திற்காய்
ஓடும் தகப்பனுக்கு
என்றும் கிடைத்து விடுவதில்லை
ஒரு நாள் விடுமுறை

இலட்சியப் பாதை எனும்
எட்டாக்கனிக்கு
வெற்றிப் பாதையைப் பல
போராட்டத்தின் மத்தியில்
புன்னகையோடு அமைத்துத் தரும்
தந்தையின் அருமை
அனுபவிக்கும் வரை எம்மவர்க்கு
புரிவதில்லை

இலட்சியக் கனவிற்காய்
ஓய்வின்றியே ஓடி
தேய்ந்து போன
தந்தையின் சுவடும்
காலத்தால் அழியாத
அழியாச்சுவடே.

-வளர்கவி க.யுவக்ஷனா
வாழைச்சேனை.

# எங்கள் தமிழினத்தார்

காப்பு :

எந்தை இறைவா உனதருளால்
விந்தை நிகழ்த்தும் தமிழதனால்
சிந்தை நிறைக்கும் வரமதனால்
முந்தை இரட்சை அருள்வாயே!

நூல் :

இனமே பெரிதாய் நினைந்தோரும்
நனவே கனவாய் உழைத்தோரும்
தனதே மொழியாய் விதைத்தோரும்
வனமே உயர்த்தும் குடியோரே! (1)

மூத்தார் மதிப்பு அளித்தோரும்
நீத்தார் நடுகல் தொழுதோரும்
ஆர்த்தர் மகிழ உழைத்தோரும்
சீர்த்தி மிகுந்த தமிழோரே! (2)

அறமே நிகழ்த்த முனைந்தோரும்
மறமே செழிக்க வனைந்தோரும்
வறமே தவிர்க்க உழன்றோரும்
கறமே எதிர்த்த இனத்தாரே! (3)

ஆற்றல் பெருக்கப் படைப்போரும்
ஏற்றம் நிகழ விளைத்தோரும்
கூற்றம் அழித்து திளைத்தோரும்
சாற்றும் மொழியர் தமிழோரே! (4)

வெடியாய்ப் புகையுள் கலந்தோரும்
இடியாய்க் களத்துள் இறந்தாரும்
குடியோர் பெருமைத் திகழ்ந்தோரும்
அடிமை வெறுத்த மொழியாரே! (5)

கொத்தம் வகுத்தப் புலியோரும்
சித்தம் தெளிந்து செழித்தோரும்
அத்தம் உயர்த்தி விழித்தோரும்
எத்தர் ஒழித்த இனத்தாரே! (6)

மரபும் நிலைக்க மொழிந்தோரும்
கரமும் இணைக்கத் தவித்தோரும்
சிரமும் இழக்கத் துணிந்தோரும்
வரமாம் எமது தமிழோரே! (7)

நெஞ்சம் உயர்த்தி நடந்தோரும்
பஞ்சம் விலகத் துடித்தோரும்
அஞ்சும் வழமை எதிர்த்தோரும்
துஞ்சா விழியோர் குலத்தாரே! (8)

அறிவு மிகுந்தப் பெரியோரும்
செறிவு வகுத்த மதியோரும்
முறிவு விரும்பா உறவோரும்
நெறியம் மிகுந்த இனத்தாரே! (9)

சங்கம் வளர்த்தக் குரவோரும்
வங்கம் பிளந்த இறையோரும்
சிங்கம் இரித்தப் படையோரும்
எங்கும் தழைக்கும் தமிழோரே!
(10)

-ஈழவேங்கை தம்பியின் தம்பி
தமிழ்நாடு.

# ஒரு வரிக் கவிதை

**விவசாயி**
உழைக்கும் சேற்றுக் கரம்

**மலர்ச் சோலை**
பட்டாம்பூச்சி விற்பவள்

**பிரசவம்**
கருவறையின் இறுதிப் படி

**கோபம்**
நங்கூரமிடப்பட்ட இருள்

**கண்**
வெளிப்படையான புத்தகம்

**அமாவாசை**
வர்ணிக்க முடியாத இருட்டு

*-தமிழ்மகள் சதுர்த்தி*
*வாழைச்சேனை.*

# சுயநலம்...

இருப்பதை விட்டு
இல்லாத
ஏதோவொன்றுக்கு
ஆசைப்படும்
அனைவரும்
சுயநலவாதிகள்
சுழன்று கொண்டிருக்கும்
இந்தப் பூமியில்...

தன்னுடைய
சுகத்திற்காக
மற்றவரின்
சுதந்திரத்தை உடைத்து
வேதனை கொடுக்கும்
சில மனிதர்களிடம்
நின்றாடுகிறது
சுயநலம்...

போராடிக்
களைத்துப் போன
உள்ளங்களிடம்
வேசமாடி விளையாடி
துன்புறுத்தும்
நெஞ்சங்களில்
எல்லாமே
சுயநலம்தான்
எங்கு போய்
இதையுரைக்க...



வீதியோர
வியாபாரிகளிடம்
எல்லாம்
பேரம் பேசுகின்ற
நாவுடைய
நபர்களிடம் கண்ட
சுயநலத்தை
நச்சரித்தால்
எச்சரிக்கவும் சிலர்
எச்சில் துப்பவும் பலர்...

எங்கு பார்த்தாலும்
கொட்டிக் கிடக்கும்
சுயநலக் கிடங்கை
எல்லாம் மூடிவிட
எத்தனித்தால் போதும்
எம்மோடும்
ஒட்டிவிட அல்லவா
விண்ணப்பம்
கோருகின்றது
சுயநலம்...

கண்டது யாதெனில்
காசோ பணமோ
கைவிலங்காக்கிக்
கொண்டவர்களை
கடைப்பிடிக்கும்
மனிதர்களிடம் தான்
அதிகமாக
உட்செலுத்தப்படுகிறது
சுயநலம்...

பதவியில் உயர்ந்தால்
சுயநலம்
பாசத்திலும் காட்டும்
சுயநலம்
சுயநலம் இல்லாத
இடமும் இல்லை
சுயநலம் குடிகொள்ளா
மனமுமில்லை...

-இரா. நிதன்
மட்டக்களப்பு.



# விம்பம்

மாறாத இவ்வுலகில்
மாற்றங்கள் தேடி மாட்டிக்கொண்ட
மாயை அவள்
மகிழ்வற்ற என் உலகை
இன்று மலர்விக்கத் துடிக்கின்றாள்

என் விழி நிறையும் போதெல்லாம் - துளி
வீழாமல் இரு விரலாகியே தடுக்கின்றாள்
நான் மனமுடையும் போதெல்லாம் என்
மனதோரம் வாசம் செய்கிறாள்
நான் பேருவகை கொண்டால்
பேரானந்தம் கொள்கிறாள்
பெருந்துன்ப மடைந்தாலும்
எனைப் பெற்றவளாய் அணைக்கிறாள்

இமை வறண்டு இணையிழந்து
இதயம் வலிக்கையில்
இறுதி வரை தாங்குவேன்
என்றெனைத் தூங்க வைக்கிறாள்

யார் அவள்?
எங்கிருந்து வந்தாள்?
எனக்காக வந்தாளா?
இல்லை
என்னோடே பிறந்தாளா?

புரிந்து கொண்டேன்
அவள் என் கண்ணாடி விம்பமல்ல
வீழ்ந்திடத் துடிக்கும் என் கண்ணீரின் விம்பம்
விடையில்லா வினாக்களுக்கு
விம்பமாய் விடை சொன்னது
கண்ணாடி

அவள் என் மனசாட்சி
அதற்கு என் மனமே சாட்சி.

-தமிழினியாள்
குருமண்வெளி.



## -தமிழ்மொழி வாழ்த்து-

வாழ்க நிரந்தரம் வாழ்க தமிழ்மொழி
வாழிய வாழிய வே!

வான மளந்த தனைத்தும் அளந்திடும்
வண்மொழி வாழிய வே!

ஏழ்கடல் வைப்பினுந் தன்மணம் வீசி
இசைகொண்டு வாழிய வே!

எங்கள் தமிழ்மொழி! எங்கள் தமிழ்மொழி!
என்றென்றும் வாழிய வே!

சூழ்கலி நீங்கத் தமிழ்மொழி ஓங்கத்
துலங்குக வையக மே!

தொல்லை வினை தரு தொல்லை யகன்று
சுடர்க தமிழ்நா டே!

வாழ்க தமிழ்மொழி! வாழ்க தமிழ்மொழி!
வாழ்க தமிழ்மொழி யே!

~சுப்பிரமணிய பாரதியார்.

